*Expenditure in Government departments*

* 183 *Q*.—SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Special Officer appointed to devise ways and means for reducing the expenditure has submitted any proposals in respect of each Department; and

(*b*) whether the Government have taken any action on his recommendations so far made?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) Yes, Sir.

The Special Officer has made various recommendations in regard to a number of departments of the Government. These recommendations are being examined in consultation with the Heads of Departments concerned.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know whether the Government will be pleased to place his report on the table of the House?

THE HON. SRI C. SUBRAMANIAM : At the proper time, I shall place it on the table of the House.

SRI K. ANBAZHAGAN : அரசாங்க நிர்வாக யந்திரத்திலே சில துறைகளிலே மட்டும் ஒரே பணியை நிறைவேற்றுவதற்காக பல அதிகாரிகள் இருக்கிறார்கள் என்று குறை பேசப்படுகிறது. ரெவின்யூ இலாக்காவில் தாலூக்காக்களில் பல தாசில்தார்கள் இருப்பதனால், பல குழப்பங்கள் இருக்கின்றன. அவைகள் கவனிக்கப்பட்டிருக்கின்றனவா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த அதிகாரி ஒவ்வொரு இலாக்காவாக எடுத்துக் கொண்டு, அதிலே நடந்து வருகிற நடவடிக்கைகளை கவனித்து, அதிகாரிகளின் எண்ணிக்கையையும் கவனித்து, ஏதாவது சிக்கனம் செய்ய முடியுமா என்று பரிசீலித்து வருகிறார். கனம் அங்கத்தினர் சொல்வதையும் கவனித்து இருப்பார்கள்.

SRI N. K. PALANISAMI : ரெவின்யூ போர்டைப்பற்றி அந்த ஸ்பெஷல் ஆபீஸர் விசாரணை செய்ய வேண்டுமென்று சர்க்கார் சார்பில் சொல்லப்பட்டதா ? அதைப்பற்றி விசாரித்தார்களா? அதன் முடிவு என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : : ரெவென்யூ போர்டிலுள்ள நான்கு மெம்பர்களைப்பற்றி விசாரணை செய்யவில்லை. பொதுவாக ரெவென்யூ போர்டைப்பற்றியும், எல்லா இலாகாக்களைப் பற்றியும் விசாரித்து வருகிறார்கள்.

SRI S. NAGARAJA MONIGAR: நமது முன்னேற்றத்தின் காரணமாக, எல்லாத் துறைகளிலும் வேலை அதிகரித்துக் கொண்டு வருகிற சந்தர்ப்பத்திலே, நமக்கு அதிகமான உழைப்பாளிகள் எல்லாத் துறைகளிலும் தேவையா யிருக்கிறபொழுது ஏதோ சிக்கனம் என்ற பெயரால், செலவு செய்ததின் பலனை அடைய வேண்டி யிருக்கிற நேரத்திலே, அளவுக்கு மீறி சிக்கனம் செய்ய வேண்டிய நிலைமை நேரிடுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த பயம் கனம் அங்கத்தினருக்கு வேண்டியதில்லை என்று நினைக்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : மராமத்து இலாக்கா, ஹைவேஸ் இந்த இரண்டுக்கும் ஒரு எஞ்சினியர் இருந்தால் போதுமா என்ற சிபார்சு கவனிக்கப்பட்டு வருகிறதா ? அல்லது இப்பொழுது இருப்பது போல் இரண்டுக்கும் தனித்தனி எஞ்சினியர்கள் இருக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறதா ?

4th March 1958]

Mr. SPEAKER : The hon. Member must wait for the report to be published.

*Estate Workers in the Kanyakumari district*

* 184 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have received a memorandum, dated 14th October 1957, from the Tamilnad Estate Workers' Union, Kulasekharam, Kanyakumari district, addressed to the District Labour Officer, Nagercoil;

(*b*) if so, the contents thereof; and

(*c*) the action taken thereon?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The Union put forth as many as 25 demands and stated that if the demands were not conceded within two weeks from the date of their submission, it would be constrained to resort to direct action. Subsequently, in its Memorandum, dated 6th November 1957, the Union withdrew some of its demands and put forward only 16 demands.

(*c*) The Labour Officer, Nagercoil, held preliminary discussion on 6th December 1957, and asked the parties to meet him on 9th January 1958 for conciliation. His further report is awaited.

Sri V. K. KOTHANDARAMAN : வருஷக் கணக்கில் வேலை செய்து கொண்டிருக்கிற தொழிலாளர்கள் இது வரையில் நிரந்தரமாக்கப்படவில்லையென்றும், அந்தத் தொழிலாளர்கள் விஷயத்தில் "பாக்டரி சட்டம்" சரியான முறையில் அமல் நடத்தப்படவில்லையென்பதும் சர்க்காருக்குத் தெரியுமா ? உடனடியாக அந்தக் குறையை நிவர்த்திக்க சர்க்கார் முயற்சிப்பார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொன்ன இரண்டு புகார்களும் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் சமர்ப்பித்த 25 புகார்களில் இரண்டு. அவைகள் எவ்வளவு தூரம் சரி என்பதை "கன்ஸிலியேஷன் ஆபீசர்" பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள். அவ்வாறு அவர்கள் சொல்லுகின்ற புகார் சரி என்று அந்த ஆபீசர் சொன்னால், தகுந்த நடவடிக்கை உடனடியாக எடுக்கப்படும்.

*Rural Water-supply Schemes*

* 185 *Q.*—Sri P. G. MANICKAM : Will the Hon. Minister for Revenue be pleased to state—

(*a*) the amount allotted, districtwise, for the comprehensive scheme for Rural Water-supply in the State during 1957–58; and

(*b*) the amount spent during the past six months district-war?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

a Printed as Appendix I on page 231 infra.